உ

கணபதிதுணை.

# திருச்செந்தூர்க் குமரேசர் ஆசிரியவிருத்தம்.

இது

பெரியகுளம்

கருவை. சங்கரலிங்கம் பிள்ளை

இயற்றியது.

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை

பதிப்பு.

துர்முகி௵ தைமீ.

உ

கணபதிதுணை.

திருச்செந்தூர்க்

# குமரேசர் ஆசிரிய விருத்தம்.



இது

பெரியகுளம்

கருவை • சங்கரலிங்கம்பிள்ளை

இயற்றியது.

சென்னை:

மத்ராசு ரிப்பன் அச்சுக்கூடம்.



துர்முகிஹு

தைமீ.

கணபதிதுணை.

# திருச்செந்தூர்க்
# குமரேசர் ஆசிரிய விருத்தம்.

## காப்பு.

திருவார்திரைக்கடல்சூழ்செந்திற்பதிவாழ்
பொருசூர்களைகுமரற்போற்ற - இருசீரும்
வேண்டியவாறுநல்கும் வேழமுகன்முத்திநெறி
தூண்டியசெங் தாளே துணை.

---

பொங்கார்வ யெழுமிரவி விரிகிர ணபந்தியிற் பொலியுநவ ரத்ன முடியும் - பூசுதிரு நீற்றோடு திலகமணி நெற்றியும் புன்னகைப் பவளவாயும், தொங்குபல கனி விரிந்தொழுகுதே னருவிபோற் றூயவிரு கருணைவிழியும் - தோமிலா தொளிருமதி வதனமுஞ் செங்கையிற் றொட்டவடி வெற்றிவேலுந், தங்குபொற் காறைமணி மாலைமுந் நூன்மார்புஞ் சதங்கையொலி சிற்றிடையுமாய்ச் - சதுமறைக ளிசைகழற் பதமுடன் மயிலின் மிசை தமியன்முன் றினமும்வருவாய்,திங்களம் பிறை

நுதல் வள்ளிதெய்வானைமகிழ் சிவஞான யோகவடிவே-சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில் வளர் குமரேசனே. (க)

சுரர்மிடிமை தீர்த்திடச் சரவணப் பொய்கையிற் றோன்றிவிளை யாடியருளிச்-சுடர்விரிகை வேலினா லசுரர்குலம் வேரறச் சூரசம் மாரமாக்கி, வரமினிதளித்துமச் சுரர்பதிக் குமரியை மணந்துபின் மால்வலக்கண்-வந்தவதரித்ததொரு சுந்தரக் கயல்விழியின் வள்ளியைக் காதலித்துப், பரவுபவ மொழிபெருமை பெறு பொருநை யின்றென்பா லலைவாய்க் கரைதனிற்-பண்பு பெறு நவவீரர் போற்றவிப் புவிகாக்கும் படிவந்தவினிய செவ்வேள், திரிசுதந் தரவறவ ரீராயிரத்தர்புகழ் சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (உ)

மிக்கவிரி புவனங்க ளிற்சரா சரமதாய் மேவுபல பொருள்கட்கெலா - மிகவளர் சிருட்டிதிதி சம்மார மெனு மூன்றுவேலையுள தெய்வமென்று, தக்கபுகழ் வேதன்மாலரனைமறை பேசுமெனத் தரணியோ ரெடுத்துரைப்பர் - தண்டுளப னுருவமுஞ் சங்கரன் வேடமுஞ் சதுர்மறைக் கிறையுமாகி, இக்கலி யுகத்தினிற் கண்கண்ட

தெய்வமென வெல்லாஞ்செய் வல்லமூர்த்தி - இகபர மிரண்டிற்கு மேதுவாய் நின்றநீ இவ்வேழைக் கிரங்க லரிதோ, செக்கர்நேர் திருமேனி யறுமுகச் செல்வனே சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு கந்த வரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (ங)

கலியாரு மிவ்வுலகை யழியாத பொருளெனக் கருது மனம்வையி னனல்போற்-கண்டவிட மெங்கணு மேத்தே யையநின் கருணைமழை பொழியவில்லையாற், பொலி வாகி யுறுமதி வளிவழித் தூசிபோற் புலன்செல்வழி வழியதாகிப்-போக்குவர வாகியே பித்துக் குரங்காகிப் போகுமது வுண்மை கண்டாய்,வலியசூர்ப் பகைமுழுது முதலறக் களையவெழில் வயங்குகதிர் வேலெடுத்து-வானவர்கண் மிடிகெட நிசாசரர்க ளூரமாற வந்தசிறு பால லோலா, சிலைவாள ருங்குமரி பெற்றுமகிழ் பாலனே சிவஞான யோகவடிவே-சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (ச)

அறுமுகத் திறைவனே சரவணப் பொய்கைதனி லறுவரிடமாய் வளர்த்திட்-டரனருள வுமைவந்து கந்த னென் றன்பா லணைக்க விளையாடல் செய்து,குறுமுனிக் குபதேச மருள்செய்து புலவர்தம் குரவனென வேற் றல்பெற்று - குமரகுரு பரனெனு மூங்கைகவி பாட

வருள் கூர்ந்துகவி மாலைசூடி, சிறுமையுறு நற்கீரன்
றுயர்தொலைத் தவனிடுஞ் செய்யபாமாலை யேற்றுத் -
தேவரைச் சிறைநீக்கி யசுரர்தம் முதல்போக்கிச்
சேவற்பதாகை தூக்கி, செறுத்தணித் தாறுபடை
வீடுகந் தருள்பவா சிவஞான யோகவடிவே-சிந்துதிரை
வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் கும
ரேசனே. (ரு)

அப்பனே செந்தில்வாழ் குமரனே முருகனே அய்ய
னே யெனவழைத்தா-லருளாத தேழைசொல் லம்பலத்
தேறுதென் னகிலமொழி பொய்க்கு மென்றோ, ஒப்பி
லிருபுறமாதர் கட்கணைகளான்மன முடைந்தது கொல்
கடலலைக்கு-மோசையாலோகவிஞ ரோசையோ வலது
மறை யோதலாற் கேட்கவிலையோ, தப்புபல நேரினு நீ
பொறுத் தருளென்று தாய்முனுப சாரமொழிதல் -
சகசமோ வாயினு மாசையா லொருகோடி தரம்பணிந்
தே னெனரசே, சிப்பியொடு நவமணி திடரிடு முன்றி
லாய் சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு
கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (சா)

அருவாகியுருவாகி யருவுருவ மாகியு மகண்டபரி பூர
ணமுமா-யனுதியா யாவுக்கு மப்பாலுக் கப்பாலி னுன
ந்த பூர்த்தியான,பிரமமாஞ் சிற்சோதி வடிவாகி நின்றநீ

பேசுமறை முடிவுதனிலும் - பிரகிருதியா மாயைதனை நீத்தமெய் யன்பர்பே ருளமுமுறை வையுன்றன், கருணையா மருள்சேரி னல்லாது சீவர்தாங் கடைத்தேற வகையுமுண்டோ - கட்கமழ் கடம்புபுனை பன்னிரு புயாசல கடைப்பிடித் தேனுனிருதாள், திருவுளமகிழ்ந்துநீயெனை யாளவருவையோ சிவஞானயோகவடிவே-சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (எ)

ஆசையாம் பேயிருந் தாள்கின்ற பாழ்வீடு அனுதினங்கழுவாவிடி-லழுக்கோடு நீர்மல நிறைந்துமிகு துர்நாற்றமகலாப் புழுக்கூடதாம், வாசமனமொடுபுத்தி சித்தமாங்கார மிவைவாதாடு போர்க்களமிதை - வகுத்துமேனேக்கிடிற் றசைநரம் பென்புமுதல் வைத்திட்ட தோற்பை யிதில், நேசம்வைத் தெந்நாளு மிரையினுக் குழல்வது நிசார்த்த நெறியென்றுவீணே - நெடுநாட் கழித்திட்ட புல்லறிவி னேயேனு நின்கருணை பெறுவ தெந்நாள், தேசுவடி வேலையணி சேவற் பதாகையாய் சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறுகந்தவரை மேவியருள் செந்தில்வளர் குமரேசனே. (அ)

கற்பனைகடந்த வோரானந்த வெள்ளமே கசடனேற் கருளவொருநாட் - காட்சிதர வந்தநா ளெந்தநா ளந்த

நாள் கலிவிலகுநாள தன்றோ, முற்பவச்சஞ்சித மினி யெனைத்தொடராமன் முருக்கவருள் சமயமிதுவே - மோனமாயிதுகாறு நீயிருந்தது வினைகள் முற்றுந்தொ லைக்கவென்றோ, தற்பரமதாஞ் சுப்ரமணியபால் பருகி டத்தாய் முகங்கண்ட வுடனே - தன்கையிற் பண்ட முஞ் சோரவிட் டோடுசிசுதான் பெறும்பேறு தரு வாய், சிற்பரமருக்கு மோருபதேச குருவான சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறு கந்தவரை மேவி யருள் செந்தில்வளர் குமரேசனே. (கூ)

பத்தியறியாத வென்காட்சியிற் கெளிவந்தபாதமலர் தனைமறந்து - பலநாட்கழித்தபுன்கடையனைத் தும்பி போற் பக்குவமுணர்த்தி யடியை, துத்தியஞ்செயவரு ளிமிடியுற்றகாலமென் தோன்றாததுணையுமாகி-தொல் பிணியெலாந்தீர்த்த ஞானபண்டித வுனது துணையடிக டினமும் வாழி, முத்திநெறி யீதெனச் சற்று நெறி யறியாத மூர்க்கனுக் குனதுகருணை-முதிர்தருகடாட்ச வீட்சணமருளலருமையோ முருகனே யுளமிரங்காய், சித்தர்முதனித்யமுஞ் சுத்தமொடுபத்திபுரி சிவஞான யோகவடிவே - சிந்துதிரை வாயிலுறுகந்தவரை மேவி யருள் செந்தில்வளர் குமரேசனே. (கo)

முற்றிற்று.